124

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

சுபகிருது – ஐப்பசி

2022 – அக்டோபர்

தெய்வத்திரு. நாச்சியப்ப சுவாமிகள் 11வது ஆண்டு குருபூஜையை முன்னிட்டு
30.09.2022 அன்று நடைபெற்ற பரிசளிப்பு விழாவில்
ஆடிட்டர் சிவசுப்ரமணியன் பரிசு வழங்கும் நிகழ்வு

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

சுபகிருது - ஐப்பசி

2022 - அக்டோபர் இதழ் - 124

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

**பொருளடக்கம்**



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்




# இறை வணக்கம்

ஒத்த வடத்திள நாகம் உருத்திர பட்டம் இரண்டும்

முத்து வடக் கண்டி கையும் முளைத்தெழு மூவிலை வேலும்

சித்த வடமும் அதிகைச் சேணுயர் வீரட்டம் சூழ்ந்து

தத்தும் கெடிலப் புனலும் உடையார் ஒருவர் தமர் நாம்

அஞ்சுவது யாதொன்றும் இல்லை அஞ்ச வருவதும் இல்லை

*– திருநாவுக்கரசர் தேவாரம்*

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்**

இந்திய வரலாற்றிலும், காப்பியங்களிலும் ஏராளமான தியாகத் தெய்வத் தாய்மார்களைப் பற்றிக் குறிப்பிடக் காண்கிறோம். வரலாற்றில் ஜான்சி ராணி, ராணி மங்கம்மாள், வேலு நாச்சியார், அன்னை கஸ்தூரிபாய், தில்லையாடி வள்ளியம்மை போன்றவர்கள் பற்றிப் படித்திருக்கிறோம். காப்பியங்களில் சுமித்திரை, குந்திதேவி, பாஞ்சாலி போன்ற பெருமக்களைப் பற்றிப் படித்து ரசித்திருக்கிறோம்.

அதே போல ஒரு சிறந்த தெய்வத்தாய் தஞ்சை பெருவுடையார் கோவிலைக் கட்டிய குஞ்சர மல்லன் ராஜராஜ சோழனுடைய வரலாற்றிலும், வாழ்க்கையிலும் இருந்ததாக அண்மையில் எனக்கொரு வாட்ஸ் ஆப் வந்தது. அதனைப் பெரும்பாலும் ரிஷிகேஷ் மேலாளர் விசாலாட்சி அம்மையாரோ, அல்லது பாலிடெக்னிக் கணக்காயர் த.கண்ணன் அவர்களோ அனுப்பியிருக்கலாம் என்று எண்ணுகிறேன்.

ராஜராஜன் ஒரு நாள் அந்தி மயங்கும் நேரம் தஞ்சைப் பெரிய கோவிலைச் சுற்றிப் பார்வையிட்டு வந்தான். பிரகாரத்தில் அனைத்து இடங்களிலும் ஜெகஜோதியாக நெய் விளக்குகள் சுடர்விட்டு எரிந்து கொண்டிருப்பதைப் பார்த்து மகிழ்ந்தான். இவை அனைத்தும் நிவந்தம் பெற்றவர்களாலே நெய் கொண்டு வந்து ஏற்றப்பட்டவை. அதிலே ஒரு விளக்கு மட்டும் எரியாமல் திரி அணைந்து தீய்ந்து போய்க்கிடந்தது. மன்னன் கோபம் கொண்டு இந்த விளக்கு ஏன் எரியவில்லை? என்று கோபமாகப் பொறுப்பாளரைக் கேட்ட போது, இது எழுபத்தூர் மாராயன் என்பவனுக்கு நிவந்தம் கொடுக்கப்பட்டது. அவனை இரண்டு மாதங்களாகக் காணவில்லை. ஆள் விட்டுத் தேடியும் செய்தி கிடைக்கவில்லை என்று அச்சத்துடன் சொன்னான். உடனே கோபப்பட்டுத் தேரைக் கொண்டு வர ஆணையிட்டான் ராஜராஜசோழன். நேரே எழுபத்தூர் கிராமத்திற்குச் சென்று மாராயன் குடிசைக்கு அருகில் தேரை நிறுத்தினான் தேர்ப்பாகன். கீழ் இறங்கி ஓடி

மாராயன் மன்னன் வந்திருக்கிறார் வெளியா வா! என்று சப்தமாகக் கூவினான். சில நிமிடங்களுக்கு எந்த விதமான அசைவும் இல்லை. பின்னர் தோளில் தோல் போல் வற்றிக் கிடந்த குழந்தையுடன் ஒரு பெண்மணி வெளியே வந்தாள்.

அவளைப் பார்த்து நீ யார்? மாராயன் எங்கே? என்று மன்னனே அதிகாரத்துடன் கேட்க. அந்தப் பெண் அழுதுகொண்டே நான் உங்கள் எழுபத்தூர் மாராயன்மனைவி வரகுணா. இரண்டு மாதத்திற்கு முன் வந்த காவிரி வெள்ளத்தில் நீங்கள் கொடுத்த 40 பசு மாடுகளும் அடித்துச் செல்லப்பட்டன. இப்பொழுது நானும் இந்தக் குழந்தையும் தான் மிஞ்சியுள்ளோம். இதைக் கேட்டுத் திகைத்துப் போன மன்னன் சில நிமிடங்கள் கழித்து மாராயன் இறந்து இரண்டு மாதங்கள் ஆகிவிட்டன என்கிறாய். அப்படியானால் கடந்த நாற்பது நாட்கள் பெருவுடையார் கோவிலுக்கு நெய் கொடுத்து இருக்கிறாய். அண்மையில் இருபது நாட்கள் மட்டும் தான் நெய் வரவில்லை. இது எப்படி நேர்ந்தது? என்று கோபமாகக் கேட்க, மாராயன் மனைவி வரகுணா தேர்ச் சக்கரத்திற்கு அருகில் மண்டியிட்டு இருகரம் கூப்பிச் சொன்னாள். என் அவலத்தை வெட்கத்தை விட்டுச் சொல்லுகிறேன் மன்னவா என்னுடைய தாய்ப்பாலை நாற்பது நாட்கள் விற்றுப் பெருவுடையார் கோவிலுக்கு நெய் அளித்தேன்; அதற்கு மேல் என்னால் முடியவில்லை. என் குழந்தைக்குப் பால் இல்லாமல் மெலிந்து கொண்டே வருகிறது. இதுதான் உண்மை. எங்களை மன்னித்து அருள வேண்டுமென்று கதறி அழுதாள். அவள் கதறலைக் கேட்டுச் சக்கரவர்த்தி தேரிலிருந்து குதித்து அவளையும், குழந்தையையும் அப்படியே அள்ளி எடுத்துத் தோளில் சாய்த்துக்கொண்டான்.

தியாகத் தெய்வத் தாயே குஞ்சர மல்லன் ராஜராஜனுக்கு அவன் வென்ற நாடுகள் பெரிதில்லை, அவன் கட்டிய பெருவுடையார் கோவில் பெருமை இல்லை. புலவர்கள் பாடும் வெற்றிக் கவிதைகள் புகழில்லை. உன்னைப் போல் தியாகத்தாய் என் நாட்டில் வசிக்கிறாள். குடிமகளாக இருக்கிறாள் என்பதுதான் எல்லாவற்றிற்கும் பெருமை.

தாயே உன் குடும்பத்தைப் பராமரிப்பது இனிமேல் ராஜராஜன் பொறுப்பு. உன் குழந்தையை வளர்த்து ஆளாக்குவது ராஜராஜனின் கடமை என்று அவள் கண்ணீரைத் துடைத்து ஆறுதல் கூறினான்.

உடனே தோப்பாகனை அழைத்து நாளையே மாராயன் மனைவி வரகுணா வீட்டிற்கு நாற்பது பசு மாடுகளும் அதைப் பராமரிக்க வேண்டிய வேலையாட்களும் வந்து சேரவேண்டும். இனிமேல் வரகுணா குடும்பத்தையும் தர்மத்தையும் காக்க வேண்டியது உம்முடைய பொறுப்பு. இது நம்முடைய ஆணை என்று உத்தரவிட்டான். இவ்வாறு தன் கணவனால் ஏற்றுக் கொள்ளப்பட்ட கடமையை, தர்மத்தைத் தன்னால் முடிந்தவரை தன் குழந்தையைப் பட்டினி போட்டாவது காப்பாற்ற வேண்டும் என்கிற தீவிர தர்ம சிந்தனையும் கடமை உணர்வும் கொண்ட தியாகவதிகள் ராஜராஜன் காலத்திலே வாழ்ந்து இருந்ததினால் தான் அவருடைய அரசு பலவாறு பெருகிப் பாரதம் எங்கும் ஆட்சி செய்தது. தன்னுடைய பிரஜையின் கடமை உணர்வையும் தியாக சிந்தனையையும் மதித்துப் போற்றும் மன்னனாக ராஜராஜன் இருந்தான் என்கிற காரணத்தினால் தான் ஆயிரம் ஆண்டுகள் கடந்தும் ராஜராஜ சோழனின் திருநாமம் இன்றும் ஒலிக்கிறது.

இதைப் போன்ற தாய்மார்கள் வரலாற்றிலும் காப்பியங்களிலும் மட்டும் தான் வாழ்ந்தார்கள் இல்லை. தமிழ்த்தாய்மார்களிலும் இன்னும் தியாகத் தாய்மார்கள் விளங்கி வருகிறார்கள். எங்கள் தாயார் அப்படிப்பட்ட மாதரசியே. அழகம்மை என்ற சரஸ்வதி ஆச்சி இன்னும் சில தாய்மார்களை நான் என் வாழ்க்கையில் பார்த்திருக்கிறேன். அதனால் தான் தாய்மார்களைத் தெய்வமாகவும் முதன்மையாகவும் கருதிப் போற்றி வணங்கி வருகிறோம்.

***ஆசீர்வாதங்கள்!***



## கம்பராமாயணம் (தொடர்ச்சி)

### (சபரி, சுக்ரீவன், அனுமன்)

### (சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)

கிஷ்கிந்தா காண்டத்தில் முதல் படலம் பம்பைப் படலம்.

சபரியின் வழிகாட்டுதலின்படி ரிஷிமுகரூப மலையை நோக்கிப் போய்க் கொண்டிருந்த ராமலட்சுமணர் பம்பை நதியில் நீராடி, களைப்புத் தீர்ந்து மீண்டும் புறப்பட்டனர். பம்பைப் படலத்துடைய முக்கிய செய்தி இதுதான்.

ஆனால் கம்பனின் கவித்துவம் இதை மட்டும் சொல்ல அனுமதிக்கவில்லை. நீரின் தெளிவுபற்றியும் அதில்மிதந்த மலர்கள் பற்றியும் விரிவாக விளக்கம் தருகிறார். மனைவியைப் பிரிந்த சோகத்திலிருக்கும் ராமபிரான் பம்பை ஆற்றில் மிதந்த மலர்களைப் பார்த்துச் சீதாப் பிராட்டியின் நினைவு வந்து வருந்தச் செய்தது. தாமரை மலர்கள் சீதா பிராட்டியின் முகத்தையும், குவளை மலர்கள் அவரின் கண்களையும், முல்லை மலர்கள் பற்களையும் அவருக்கு நினைவுபடுத்தி வருத்தத்தைக் கொடுத்தன. வருத்தத்துடனேயே தீர்த்தமாடி களைப்புத் தீரத்தொடர்ந்து நடந்து சென்று ரிஷிமுகரூப மலையை நோக்கி (இரலை மலை) அடிவாரத்தை அடைந்தனர். அடுத்ததாக அனுமர் படலம் தொடங்குகிறது.

இரலை மலையின் அடிவாரத்தில் இரண்டு வீரர்களை வில்லுடன் பார்த்த சுக்ரீவன் இரலை மலைக் குகைக்குள் தன்னுடைய வானரப் படைகளோடு ஒளிந்து கொண்டான். வாலி தன்னைச் சிறை பிடிக்க அனுப்பிய வீரர்களோ எனப் பயந்து தன்னுடைய அமைச்சரான அனுமனை அவர்கள் யார்? என்று பார்த்து வர அனுப்பினான்.

கம்பர் அனுமனை அறிமுகப்படுத்துகிற காலத்திலேயே மகா புத்திசாலியாக, ஞானியாகவே காட்டுகிறான். அனுமன் வருபவர்களைப் பற்றித் தெரிந்து கொள்வதற்கு ஏதுவாக இருக்கும் என்று தனது சுய ரூபத்தை விட்டு அந்தண பிரமச்சாரி வேஷம் கொண்டு அவர்களை எதிர்கொள்கிறான்.

இராமரைப் பார்த்து அனுமன் இயலபாகவே அவர் மீது பாசம் கொள்கிறான். அவனது நெஞ்சம் உருகுகிறது.

*என்பு எனக்கு உருகுகின்றது;*
*இவர்கின்றது அளவுஇல்காதல்;*
*அன்பினுக்கு அவதிஇல்லை; அடைவுஎன்கொல்?*
*அறிதல் தேற்றேன் (599-13)* என்கிறான்.

இருவரையும் கண்டு வணங்கித் தாங்கள் யாரென்று விசாரணை செய்தான். இராமரும் தங்களைப் பற்றிய வரலாறு முழுமையாகக் கூறிச் சீதையைத் தேடிப் புறப்பட்டு வந்திருக்கிறோம் என்று கூறினார். அநுமனை நீ யார்? என்று கேட்க யான் காற்றின் வேந்தருக்கு அஞ்சனை வயிற்றில் பிறந்தவன். நாமமும் அநுமன் என்பேன். சுக்ரீவன் ஏவலாளன் என்று சுருங்கச் சொல்லி விளங்கச் செய்த அழகைப் பார்த்து இராமருக்கு அநுமன் மீது தனி மதிப்பே வந்துவிட்டது. பின்னர் சொல்லின் செல்வன் என்றே அழைக்கிறார். அறிவில் சிறந்தவன். ஆற்றல் மிக்கவன் என்பதால் அவனைத் துணைக் கொள்ள எண்ணினார்.

வந்திருக்கின்ற இருவரும் நல்ல வீரர்கள். அரச குமாரர்கள். படை நடத்தும் திறன் உடையவர்கள் என்பதையெல்லாம் கணத்தில் புரிந்து கொண்டு வாயுபுத்திரன் இருவரையும் தன் தலைவனான சுக்ரீவனிடம் அழைத்துச் சென்றான். சுக்ரிவனிடம், ராம லெட்சுமணருடைய வரலாற்றைச் சொல்லி அவர்களும் சுக்கிரீவன்போல் துயரத்தில் உள்ளவர்கள் என்பதை விளங்க வைத்தான். உடனே சுக்ரீவன் சோம்பல் தீர்ந்து இயல்பு நிலைக்கு வந்தான். ராமனிடம் தான் வானர மன்னன் வாலியினுடைய தம்பி. வாலி அசுரனுடன் நடத்திய போரில் மாண்டுவிட்டான் என்று கருதி, தான் அரசாட்சி செய்ததாகவும், திரும்பிப் பிழைத்து வந்த வாலிதன்னைச் சிறைப் பிடித்து, தன் மனைவி உருமையையும் கவர்ந்து கொண்டுவிட்டான் என்றான். அவனைத் தோற்கடித்து மனைவியை மீட்டெடுக்க உங்கள் உதவி தேவையென்று வேண்டினான்.

அநுமன் வாலியுடைய வீரத்தையும் அவன் அசுரர்களைத் தோற்கடித்த போரின் திறமையையும், அரக்கர்களின் மன்னன் ராவணனை வாலில் கட்டிச் சுழற்றிய ஆண்மையையும், அனைத்தையும் கூறி விளக்கினான். மேலும் வாலியின் தவவலிமையால் எதிர் நின்று போரிடும் வீரனின் சக்தியில் பாதி

வாலிக்குச் சேர்ந்து விடும் என்ற அரிய உண்மையையும் விளக்கிச் சொன்னான்.

ராமபிரான் மற்றவற்றைப் பெரிதாகக் கருதாமல் பிறன் மனை கவர்ந்த வாலி தண்டிக்கப்பட வேண்டியவன் என்று முடிவெடுத்தான். இந்த முடிவு சீதையைப் பிரிந்த துயரத்தின் காரணமாக எடுத்த பாரபட்சமான முடிவு என்பதை இராமன் உணரவில்லை. எல்லோரும் கிஷ்கிந்தைக்குப் போய் வாலியைப் போருக்கு அழைக்குமாறு சுக்கிரீவனிடம் ஆணையிட்டான். சுக்ரீவனும் ஆரவாரமாகத் தன் அண்ணனைப் போருக்கு அழைத்தான். வாலிக்கு ஒரே வியப்பு. இவ்வளவு ஆரவாரமாகத் தன்தம்பி தன்னைப் போருக்கு அழைப்பது வியப்பாக இருக்கிறது. அவனுக்குத் துணையார் வந்திருக்க முடியும் என்று வியந்தாலும், தன்னுடைய அதிவீரத்தின் காரணமாகத் தன் மனைவி தாரை தடுத்தும், கெஞ்சியும் கேளாமல் வெளியே வந்து சுக்ரீவனை எதிர்த்து நின்றான். வாலி வதைப்படலத்தில் தாரை சுக்ரீவனுக்கு ஏதோ துணை வந்திருக்கிறது. சூழ்ச்சியோடு அழைக்கிறான். நீங்கள் செல்லாதீர்கள் என்று அழுதுபுலம்பித் தடுத்தும் கேளாமல் வாலி வெளிப்பட்டுச் சுக்ரீவனிடம் போரிட்டான். மறைந்திருந்த ராமன் தன் அம்பை எய்து வாலியை வீழ்த்தினான். வாலி தன் மீது அம்பு எய்த வீரன் யார்? என்று ஆவேசமாகக் கேட்க. ராமர் எதிரே வர, தசரத குமாரரான நீ தவறு செய்யலாமா? நான் உனக்கு எந்தத் தீங்கும் செய்யவில்லையே? என்று வாதிட்டான். உன் தம்பியை அரக்கத்தனமாகத் துரத்தியதும், அவன் மனைவியைக் கள்ளத்தனமாகக் கைப்பற்றியதும் உன் சாவுக்குக் காரணம். என்றான் இராமன். அதற்கு வாலி சொல்லுகிற சமாதானத்தைக் கேட்டு அவற்றை ஒப்புக் கொண்டு ராமர் அருள்புரிய வாலி மறைந்தான். மறையும் காலத்தும் சுக்கீரவன் அறியாத்தனத்தால் தவறு செய்தாலும் மன்னித்து அருளுவதுடன் தன் மனைவி தாரை, மகன் அங்கதன் இவர்களைக் காப்பாற்ற வேண்டும் என்று வேண்டிக் கொண்டு அங்கதன் கரம் பிடித்து ராமனிடம் ஒப்புவித்து உன் அன்புத் தவப்புதல்வன் என்று வேண்டிக் கொண்டு ராமனின் அருளாலும், ராமனின் கடாக்ஷத்தாலும் முக்தி பெற்றான் வாலி.

*(தொடரும்...)*

## ஓம் நமோ நாராயணாய! 108 திவ்யதேசங்கள்

### 22. திருவெள்ளியங்குடி

(அழ.மெய்யம்மை)

(காப்பியக் கவிஞர் நா.மீனவன் அவர்களின் பேத்தி)

108 திவ்ய தேசங்களுள் இருபத்தியிரண்டாவது திவ்ய தேசம், திருவெள்ளியங்குடி. சோழ நாட்டுத் திருப்பதிகளுள், இது இருபத்தியிரண்டாவது திவ்யதேசமாகும். இத்தலம் கும்பகோணத்திலிருந்து அணைக்கரை செல்லும் மார்க்கத்தில், சேங்கனூரில் இருந்து 1 கி.மீ தொலைவில் உள்ளது. இச்சேங்கனூர் வைணவமேதை பெரியவாச்சான் பிள்ளையின் அவதார தலமாகும். கும்பகோணம் - ஆடுதுறை பேருந்து மார்க்கத்தில் உள்ள முட்டக்குடியிலிருந்து சுமார் 1.5 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது இத்திருத்தலம்.

சப்தராமஸ்தலங்களில் இத்தலமும் ஒன்றாகும். அயோத்தி, திருப்புல்லாணி, திருப்புட்குழி, திருப்புள்ளம் பூதங்குடி, திருவள்ளூர், சீர்காழி ஆகியவை மற்ற ஆறு தலங்களாகும்.

திருவரங்கத்தைப் போன்று இத்தலமும் நான்கு யுகங்களிலும் வழிபடப்பட்டுள்ளது. கிரேதாயுகத்தில் பிரம்மபுத்திரம் என்னும் பெயருடனும், திரேதாயுகத்தில் பராசரம் என்னும் திருநாமத்துடனும், துவாபரயுகத்தில் சைந்திரநகரம் என்னும் பெயருடனும், கலியுகத்தில் பார்க்கவபுரம் என்னும் நாமத்துடனும் திகழ்கின்றது.

தஞ்சை மாவட்டத்தில் உள்ள வைணவ நவக்கிரகத் தலங்களில், இது சுக்கிரனுக்கான திருக்கோயில்.

சூரியனுக்கான தலம் – திருக்குடந்தை சாரங்கபாணிக் கோவில்

சந்திரனுக்கான தலம் – நாதன் கோவில் என்ற நந்திபுர விண்ணகரம்

செவ்வாய்க்கான தலம் – திருநறையூர் என்ற நாச்சியார் கோவில்

புதனுக்கான தலம் – திருப்புள்ளம்பூதங்குடி

குருவுக்கான தலம் – திருஆதனூர்

சனிக்கான தலம் – திருவிண்ணகர் என்ற ஒப்பிலியப்பன் கோவில்

ராகுவிற்கான தலம் – திருக்கவித்தலம்

கேதுவிற்கான தலம் - திருக்கூடலூர் என்ற ஆடுதுறைப் பெருமாள் கோயில்

பார்க்கவன் என்ற சுக்கிரன் தவமியற்றி இத்தலத்தில் சாபத்தைத் தீர்த்துக்கொண்டதால், இத்தலம் பார்க்கவபுரி என்றும் சுக்ராபுரியென்றும் அழைக்கப்படுகின்றது. வெள்ளியங்குடி என்பதுவே தூய தீந்தமிழ்ப் பெயராகும். சுக்கிரன் வெண்மை நிறமுடையவர். ஆதலால் வெள்ளி என அழைக்கப்படுகிறார்.

இங்குள்ள
மூலவர் – ஷீராப்திநாதர் என்ற கோலவில்லி இராமன்
தாயார் – மரகதவல்லி
உற்சவர் – சிருங்கார சுந்தரன்
விமானம் – புஷ்கலா வர்த்தக விமானம்
தலவிருட்சம் – கதலி மரம் (வாழை மரம்)
தீர்த்தம் – சுக்ர தீர்த்தம், பிரம்ம தீர்த்தம், இந்திர தீர்த்தம், பராசுர தீர்த்தம்
கோலம் – கிழக்கு நோக்கிய புஜங்க சயனக் கோலம்

இங்குள்ள மூலவரின் பெயர் ஷீராப்திநாதர். ஒவ்வொரு தலமாகத் தரிசித்தபடி சோழ நாட்டில் பயணித்துக் கொண்டிருந்தார் திருமங்கையாழ்வார். திருவெள்ளியங்குடிக்கு வந்தவர், மூலவர் ஷீராப்திநாதர் திருமேனியின் அழகில் சொக்கிப் போனார். திருஇந்தளூரில் பெருமாளின் தரிசனம் தனக்குக் கிடைக்காததால், மனம் வருந்திய ஆழ்வாரை இந்த ஊர்ப் பெருமாள் வலிய அழைத்து அவருக்குத் தரிசனம் தந்தாராம். எனவே அதுவரை ஷீராப்திநாதன் என்று அழைக்கப்பட்டு வந்த மூலவரை, கோலவில்லி இராமர் என்று செல்லமாக அழைக்க ஆரம்பித்த திருமங்கையாழ்வார், பாசுரங்களிலும் இத்திருநாமத்தைக் கொண்டே பாடினார்.

இத்தலத்தில் புஜங்கசயனக் கோலத்தில், நீலவண்ணத்தில் இராமரைக் காணலாம். தன்னை அழகுபடுத்திக் கொள்வதில், இப்பெருமானுக்கு விருப்பம் அதிகமாதலால் உற்சவரின் பெயர் சிருங்கார சுந்தரன் ஆயிற்று. இக்கோவிலில் கருங்கல் தரையில் செங்கதலி வாழை முளைத்து, வருடத்திற்கு ஒரு தார் போட்டு வாழையடி வாழையாக இருந்து வருகின்ற காட்சியினை இன்றும் காணலாம். இங்குள்ள இராஜகோபுரம் மூன்று நிலைகளைக்

கொண்டது. இங்கு தயிர் சாத நைவேத்தியம் தனிச் சிறப்பு வாய்ந்ததாகும்.

கோவிலுக்கு எதிரே சற்றுத் தொலைவில் ஒரு சிறிய ஆஞ்சநேயர் கோவில் உள்ளது. கோலவில்லி இராமரை நோக்கி வணங்கியபடி நிற்கிறார் ஆஞ்சநேயர்.

என் அய்யா, காப்பியக்கவிஞர், நற்றமிழ்நாவலர் கவிஞர்கோ. நா.மீனவனார் திருவெள்ளியங்குடி குறித்து எழுதிய ஐந்து பாடல்கள் இதோ!

1. சிவராத்திரியன்று ஓர் எலி, ஈஸ்வரனின் கருவறையில் அங்குமிங்குமாக ஓடிக் கொண்டிருந்தது. அப்போது தனக்குத் தெரியாமலேயே அங்கு எரிந்து கொண்டிருந்த விளக்கின் திரியைத் தன் வாலால் தூண்டிவிட்டது. விளக்கு பிரகாசமாக எரிந்தது. அப்புண்ணிய பலனால், அடுத்த பிறவியில், அந்த எலிதான் பிரகலாதனின் பேரனான மகாபலிச் சக்கரவர்த்தி.

மகாபலிச் சக்கரவர்த்தி மிகவும் தர்ம சிந்தனை உள்ளவர். அவருக்கு இந்திரலோகப் பதவி மீது ஒரு ஆசை. அப்பதவியைப் பெறும் பொருட்டு, ஒரு மாபெரும் யாகம் செய்யத் தலைப்பட்டார். இவ்வேள்வியை அசுரகுரு சுக்கிராச்சாரியாரை வைத்துச் செய்வதென முடிவு செய்யப்பட்டது. பல பிறவிகளில் தவமிருந்து பெற வேண்டிய சிறப்பு மிக்க இந்திரலோகப் பதவியை, ஒரே யாகத்தில் மகாபலி பெறுவதை இந்திரனும் தேவர்களும் விரும்பவில்லை. அவர்கள் ஸ்ரீமன் நாராயணனைச் சரணடைந்தனர்.

தேவர்களின் வேண்டுகோளை ஏற்ற நாராயணன், மூன்றடி உயரம் கொண்ட வாமனனாக அவதாரம் எடுத்தார். மகாபலிச் சக்கரவர்த்தி, தன் வேள்வியை நிறைவு செய்யும் விதமாக மக்களுக்குத் தானதர்மங்கள் செய்யத் தொடங்கினார். அவற்றைச் செய்து முடிக்கும் போது, பெருமாள் வாமனனாக அங்கு வந்தார். மகாபலியிடம் சென்று, தான் செய்யும் யாகத்திற்குத் தன் கால் அளவில் மூன்றடி நிலம் கேட்டார்.

அப்போது, அசுர குரு சுக்கிராச்சாரியார், இவர் விஷ்ணுவின்

அவதாரமாகத் தெரிகின்றார். அவருக்குத் தானம் அளிப்பதற்கு முன் சற்று யோசியுங்கள் என்றார். ஆனால் மகாபலிச் சக்கரவர்த்தியோ, மஹாவிஷ்ணுவே என்னிடம் தானம் பெற வந்துள்ளார் என்றால் எந்தளவிற்கு நான் சிறந்தவன், நான் தானம் கொடுத்தே தீருவேன் என்றார்.

தானம் கொடுக்கக் கமண்டலத்திலிருந்து நீரை வார்க்க, மகாபலி சக்கரவர்த்தி முயன்ற போது, நீர் வராத மாதிரி, வண்டு அவதாரம் எடுத்து, சுக்கிராச்சாரியார் கமண்டலத்தை அடைத்துக் கொண்டார். அப்போது வாமனர் அங்கிருந்த ஒரு தர்ப்பையை எடுத்து கமண்டலநீர் வரும் துவாரத்தைக் குத்த, சுக்கிராச்சாரியார் ஒற்றைக் கண்ணை இழந்தார்.

இழந்த நேத்திரத்தைச் சுக்கிரன் இவ்விடத்து தவமிருந்து பெற்றதால் இவர் பெயரால் இத்தலம் வெள்ளியங்குடி என அழைக்கப்படுகின்றது. தனக்குக் கண்ணில் ஒளி தந்த பெருமாளுக்கு நன்றி செலுத்தும் வகையில், சுக்கிர பகவான் அணையா தீபமாக இத்தலத்தில் இரவு பகலாகப் பிரகாசித்துக் கொண்டிருக்கிறார். அத்தீபம் நேத்திர தீபம் எனப்படுகின்றது.

அஞ்ஞானத்தை அகற்றி, ஞானத்தை நல்கும் திருமால், உயிர்கள் அனைத்தையும் காக்கின்ற ஒளி பொருந்திய முகத்தை உடைய நெடுமால், சுக்கிரன் தவமிருந்து ஒருகண்ணைப் பெற்ற இத்தலத்தில் கருணைபுரிவதற்காக மரகதவல்லித் தாயாருடன் அமர்ந்திருக்கின்றான். அவ்வாறு வெள்ளியங்குடியில் அமர்ந்திருப்பவனை வணங்கச் சொல்லும் முதல் பாடல் :

*உயர்வெள்ளி தவமிருந்தே ஒருகண்ணைப் பெற்றதலம்*
*மயர்வறுநல் மதிநலத்தான் மரகதமாம் வல்லியுடன்*
*உயிரனைத்தும் காக்கின்ற ஒளிமுகத்துத் திருநெடுமோல்*
*தயவருளும் வெள்ளிகுடி தானமர்ந்தான் வணங்குமினே*

2. தேவர்களின் சிற்பி விஸ்வகர்மா. அவன் எம்பெருமானுக்குப் பல திவ்ய தேசக் கோயில்களைக் கட்டியவன். அசுரர்களின் சிற்பி மயன். அவன், பெருமாளுக்குத் தான் எவ்விதக் கோயிலையும்

கட்டவில்லையே என வருத்தப்பட்டு, தனக்கு, பெருமான் காட்சி கொடுக்க வேண்டுமென்று கடுந்தவமியற்ற எம்பெருமான் அவனுக்குச் சங்குச் சக்கரதாரியாக, மஹாவிஷ்ணு கோலத்தில் காட்சியளித்தார். தனக்கு இவ்விதமான திருக்கோலக்காட்சி வேண்டாம் என்றும், இராமாவதாரத் திருக்கோலத்தையே தான் தரிசிக்க விரும்புவதாய் மயன் கூற, தம் கரத்திலிருந்த சங்கு சக்கரங்களைக் கருடனுக்குக் கொடுத்துவிட்டு, வில் அம்புகளுடன், அலங்காரக் கோலத்துடன், கோலவில் இராமனாகக் காட்சியளித்தார்.

அக்கோலவில்லி இராமன் என்னும் நாமம் கொண்ட பெருமான், அகன்ற பெரிய இவ்வுலகை உண்டருளியவன். ஊழிக் காலத்தில், பிரளய வெள்ளத்திலிருந்து உலகங்களையும், உயிர்களையும் காக்க வேண்டும் என்பதற்காக, தானே ஆலிலைக் கண்ணனாக அவதாரம் செய்து உலகங்களையும் உயிர்களையும் எல்லாம் உண்டு வயிற்றில் வைத்துக் காப்பாற்றியவன். நான்கு வேதங்களுக்குப் பொருளானவன். முதலை காலைக் கவ்வ, ஆதிமூலமே என ஓலமிட்டு அழைத்த கஜேந்திரனாகிய யானைக்கு ஓடிவந்து உதவியவன், ஆலிலைமேல் துயில்பவன். அவனுடைய அருளை வேண்டி வணங்கச் சொல்லும் இரண்டாம் பாடல் :

***கோலவில்லி இராமனையே கொண்டாடும் நாமத்தான்***
***ஞாலமெலாம் உண்டுமிழ்ந்த நால்வேதப் பொருளாவான்***
***ஓலமிட்டுக் கரியழைக்க ஓடிவந்த குரைகழலான்***
***ஆலிலைமேல் கண்வளர்வான் அருள்வேண்டி வணங்குமினே***

3. இத்தலத்தில் உள்ள பெருமான், பிரம்மா, சுக்கிரன், இந்திரன், பராசுரர், மயன் ஆகியோருக்குக் காட்சி கொடுத்தவன். மூன்றடி நிலம் கேட்ட வாமனனுக்கு, மூன்றடி நிலத்தைக் கொடுக்க மகாபலி இசைந்தார். அந்த நேரத்தில், வாமனனாக வந்த மஹாவிஷ்ணு, விஸ்வரூபம் எடுத்து, ஓர் அடியால் பூமியையும் மற்றுமோர் அடியால் விண்ணையும் அளந்துவிட்டு, மூன்றாவது அடிக்கு இடம் எங்கே என்று கேட்க, வந்தது பரம்பொருளான ஸ்ரீமன் நாராயணனே என அறிந்த மகாபலி, தன் சிரசில் பகவானின் மூன்றாவது அடியை வைத்துக்கொள்ளுமாறு கேட்டுக்கொண்டான். நாராயணனும்

அவ்வாறே, அவன் தலையில் மூன்றாவது அடியை வைத்து அழுத்தி, அவனைப் பாதாள உலகிற்கு அனுப்பினார்.

இவ்வாறு மண்ணொடு விண்ணையும் அளந்த விக்கிரமனின் அரவணையைக் குடையாகப் பிடித்து இருப்பவனின் மலரடிகளை வணங்கச் சொல்லும் மூன்றாம் பாடல் :

*நான்முகனும் பார்க்கவனும் நல்லுலகாள் இந்திரனும்*
*ஆனதொரு பரசுடையான் அணிவிண்ணோர் திருமயனும்*
*வானமொடு வையத்தை வந்தளந்த விக்கிரமன்*
*மாநாகக் குடைபிடிப்பான் மலரடியை வணங்குமினே*

4. மயனின் விருப்பத்திற்காக, மஹாவிஷ்ணு கொடுத்த சங்கு சக்கரங்களைப் பெற்றுக் கொண்டதால், இங்குள்ள கருடாழ்வாருக்கு நான்கு கரங்கள் உள்ளன. இந்த சதுர்புஜ கருடாழ்வார் சங்கு சக்கரத்துடன் அருள் பாலிக்கும் அற்புதமான திருமேனியுடனும், இடக்காலை மடித்து, வலக்காலைக் குத்திட்டு அமர்ந்திருக்கும் வடிவத்திலும் அழகு ததும்பக் காட்சி தருகிறார்.

இத்தலத்தில் நான்கு தீர்த்தங்கள் உள்ளன. இந்திர தீர்த்தம் ஆலயத்தின் எதிரே இருக்கிறது. பிரம்ம தீர்த்தம், ஆலயத்திற்கு மேற்கே உள்ளது. சுக்கிர தீர்த்தக் கிணறு ஆலயத்திற்கு வடக்கிலும் பரசார தீர்த்தக் கிணறு ஆலயத்திற்குத் தென்திசையிலும் உள்ளன. இராமனின் இரண்டு திருவடிகளையும் சேவிக்கச் சொல்லும் நான்காம் பாடல் :

*கரம்நான்கு தானுடைய கருடன்தான் உவந்தபதி*
*தரமான தீர்த்தங்கள் நான்குடைய தனித்தபதி*
*அருள்செழிக்கும் திருவெள்ளி யங்குடியான் இப்பதியில்*
*இருந்தருளும் காகுத்தன் இணையடிகள் சேவிமினே*

5. திருமகளுக்குத் தன்நெஞ்சில் இடம்கொடுத்த திருமார்பை உடையவன், தாமரையில் வாழ்கின்ற திருமகளிடம் மயங்கி, மந்தர மலையைக் கடைந்து அமிழ்தம் பெற்ற பிறகு தோன்றிய, அமிழ்தம் போன்ற திருமகளைக் கொண்டவன், திருவெள்ளியங்குடியில் விரும்பி இருப்பவன், அவனுடைய திருவடிகள் வல்வினைகளை நீக்கும் எனக்

ஆறும் ஐந்தாம் பாடல் :

*திருவினுக்கே இடந்தந்த திருமார்பன் தாமரைவாழ்*
*திருவிடமே மயங்கியவள் திருவாயின் அமுதுண்டோன்*
*திருவெள்ளி யங்குடியாம் திருப்பதியை நயந்தவனாய்*
*வருமாலின் திருவடிகள் வல்வினையை நீக்கிடுமே*

திருமங்கையாழ்வார் இத்தலத்தைப் பத்துப் பாசுரங்களால் மங்களாசாசனம் செய்துள்ளார். கண்ணனாய் அவதரித்துப் பசுக்களை மேய்த்து, ராமனாய் சமுத்திரத்தில் அணைகட்டி, இலங்கை சென்று அரக்கர்களின் தலைகளை அறுத்துத்தள்ளி, மழைக்கால மேகம் போன்ற ஒப்பற்ற வடிவம் கொண்ட வாசுதேவன் உறையும் கோயில், வரிசையாய்ப் பூத்திருக்கின்ற சுரபுன்னை மரங்கள், முத்துப் போன்ற மொட்டுக்கள் அரும்பியுள்ள புன்னை மரங்கள் ஆகியவற்றின் பொந்துகளிலே வண்டுகள் நெருங்கி இருந்து தேனை ஆரவாரத்தோடு பருகி இன்னிசை பாடும் தலம் திருவெள்ளியங்குடியாகும் என்று இத்திவ்யதேசத்தைப் புகழ்ந்து பாடும் திருமங்கையாழ்வாரின் மங்களாசாசனப் பாடல் :

*ஆநிரை மேய்த்து அன்று அலை கடல்அடைத்திட்டு அரக்கர்*
*தம் சிரங்களை உருட்டி*
*கார் நிறை மேகம் கலந்தோர் உருவக் கண்ணனார் கருதிய*
*கோயில்*
*பூநிரைச் செருந்தி புன்னை முத்துஅரும்பிப் பொதும்பிடை*
*வரிவண்டு மிண்டி*
*தேனிரைத்து உண்டு அங்கு இன்னிசை முரலும்*
*திருவெள்ளியங்குடியதுவே.*

*(தொடரும்...)*



## பரந்தாமன் பாமாலையில் மீனவனின் மேதா விலாசம் - 17

தமிழாகரர் தெ.முருகசாமி

(மேனாள் முதல்வர், இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி) புதுச்சேரி

பாண்டித்தல நவதிருப்பதிகளுள் ஐந்தாவதானது திவ்யதேசமாம் திருக்குளந்தை என்னும் பெருங்குளத்தலமாகும். கிழக்கு நோக்கிய நின்ற கோலத்துடன் சேவை சாதிக்கும் பரந்தாமன், குளந்தை வல்லித் தாயாருடன் சேவாதிகளுக்குத் திருக்காட்சி நல்க, இத்தலத்தின் பெருமையை மீனவர் சீவில்லிபுத்தூரோடு ஒப்பிட்டுக் கூறினார்.

ஆண்டாள் நாச்சியாரைப் போல மானிடர்க்கு வாழ்க்கைப் படேன், மணந்தால் பகவானையே மணப்பேன் என்ற உறுதியுடன் வேதசாரன் குமுதவல்லித் தம்பதியருக்குப் பிறந்த கமலாவதி என்ற பெண்ணின் கடுந்தவத்தை மெச்சிப் பரந்தாமன் மணந்து கொண்டாராம். இது பற்றி மீனவர் மாலை மணக்கவென மயல் கொண்ட கமலாவதி, மணம் முடித்தான் என்பதாகக் குறிப்பிடுகிறார், இதனைக் கேட்ட சேவாதிகள் பெருங்குளப் பரந்தாமனின் அருட் குளத்தில் நனைந்தபடித் திருக்கோளூர் என்னும் திவ்ய விண்ணகரம் காண அவர் கொண்டு செல்ல - வைத்தமா நிதியாம் மூலவரைக் குமுத வல்லியாம் கோளூர் வல்லியுடன் தொழுது நிற்கின்றார்கள்.

கிடந்தகோல, புஜங்கசயனத் திருமால் - நவநிதிக் கோமானாகிய குபேரனுக்கிருந்த சாபத்தை நீக்கி அவனுக்கு மீண்டும் பழைய குபேர வாழ்வைத் தந்தானாம் என்பதால் இக்கோளூர், இழந்த பொருளை மீட்டுத்தரும் திருத்தலம் என்பதாக மீனவர் கூறக்கேட்டு மெய்சிலிர்த்த சேவாதிகள், ஊழகற்றும் திருக்கோளூர் உறைவான் தன் திருவடியைப் போற்றி வழிபட்டார்கள்.

இக்கோளூரில் நம்மாழ்வார் செய்த மங்களாசாசனம் மிகச்சிறப்புக்குரியதாகும் என்பதால் தான் தவமுடைய நம்மாழ்வார் தமிழுக்குப் பொருளானான் எனக் கோளூர்ப் பரந்தாமனைப் பரவினார்.

மேலும் நம்மாழ்வாரைக் குருவாகக் கொண்டு வாழ்ந்த மதுரகவியாழ்வார் அவதாரம் செய்த சிறப்புடைய தலம் இக்கோளூர்

என்பதை மீனவர் மதுரகவி பிறந்த தலம் எனப்பாடியுள்ளார். இச்சிறப்பை யெல்லாம் அறிந்ததும் மீனவர் அழைக்க அவருடன் தென்திருப் பேரை எனும் திவ்ய தேசமகர நெடுங்குழைக் காதர் என்னும் பரந்தாமனைக் குழைக்காது வல்லியாம் நாச்சாருடன் சேவாதிகளாம் நாம் சேவிக்கின்றோம்!

சோழ நாட்டில் திருப்பேர் நகர் என்ற ஓர் ஊர் உள்ளதால் தென்பேரை எனப்படும் இத்தலம், துர்வாச முனிவரின் சாபத்தால் பூமாதேவி இலக்குமியின் பேரைக் கொண்டே தவம் செய்து பேறு பெற்றதால் வடமொழியில் ஸ்ரீ பேரை என்ற சொல் திருப்பேரை என்றானதாக மீனவர் இத்தலம் பற்றிய விளக்கம் தந்தார்.

அப்பூமா தேவி தவம் செய்த நிலையில் நதியில் தீர்த்தமாடும் போது இரண்டு மீன்கள் வடிவில் குண்டலங்கள் அகப்பட்டன. அதனைப் பரந்தாமனுக்கே தந்து விட்டதால் இத்தலத்துப் பரந்தாமன் மகரநெடுங்குழைக்காதன் எனப்பட்டதாகவும் மீனவர் மூலஸ்தானச் சிறப்பை விவரித்தார்.

இது பற்றி நம்மாழ்வார் மகர நெடுங்குழைக்காதன் மாயன் என மங்களாசாசனம் செய்தபடியே மீனவரும் பாமாலையின் முதல் பாடலைப் பாடியுள்ளார். இப்படியாகப் பேரைப் பிரானை வணங்கியதும் நம்மாழ்வாரின் அவதாரத் தலமான ஆழ்வார் திருநகரி என்னும் திருக்குருகூர் காண மீனவர் ஆர்வமுடன் அழைக்கச் சேவாதிகள் திருக்குருகூரைக் குறுகினர்.

இத்திருத்தலப் பெருமையை அளவிட முடியாது. திருமாலே பிரம்மாவிற்குக் குருவாக வந்து உபதேசித்ததால் குருகூர் என்ற பெயர் அமைந்ததாம்.

குருகு என்ற சொல்லுக்குச் சங்கு என்ற ஒரு பொருளும் உண்டு. ஒரு காலத்தில் சங்கு இத்தலத்திற்கு வந்து மோட்சம் பெற்றதால் குருகு ஊர் எனப்பட்டதாம்.

இவை அனைத்தையும் ஒருசேர உணருமாறு மீனவர் பாமாலையில் நான்முகனார் உய்திபெற நாரணனே குருவானான் என்றும் சங்கன் எனும் முனிவன் செய்தவத்தால் பேறுபெற்ற பொழில் குருகூர் என்றும் பாடியுள்ளார்.

இக்குருகூருக்கு ஆழ்வார் திருநகரி என்ற பெயரே சிறப்பானதாகக் கூறுவர் என்கிறார் மீனவர். ஆழ்வார்கள் அனைவரும் சடகோபராம் நம்மாழ்வாரையே நம் ஆழ்வார் நம் ஆழ்வார் எனப்போற்றிய சிறப்பால் நம்மாழ்வாரின் பிரலாபத்தைச் சிறப்பிக்கும் வகையில் ஆழ்வார்களுக் கெல்லாம் இதுவே நகர் என்ற குறிப்பில் ஆழ்வார் திருநகரி எனப்பட்டதாம். அதாவது திவ்ய பிரபந்தத்தின் ஆயிரம் பாடல் பாடியவர் நம்மாழ்வாரே என்பதால் அப்பெருமையை அடியாருக்குச் செய்தவன் மூலம் அது அங்குள்ள ஆதிப் பிரானுக்கு ஆனதாக மீனவர் வாய்மணக்கக் கூறினார். இதனை அரியமால் வதிகின்ற ஆழ்வார் திருநகரி என்ற பாமாலை வரியால் உணர்ந்து மகிழலாம்.

இங்ஙனம் குருகூரைச் சேவித்ததும் திருவில்லிபுத்தூர் என்னும் ஸ்ரீவில்லிபுத்தூர் சென்று வடபத்ரசாயி என்னும் கிடந்த கோலரங்க மன்னராம் மூலவரைக் கண்ணாரக் கண்டு சேவிக்கின்றோம்.

உலகப் புகழ்பெற்ற ஆன்மீக வைணவத்தலமான இக்கோயிலின் ராஜகோபுரந்தான் தமிழ் நாடரசின் முத்திரையாக உள்ள தனிச் சிறப்புக்குரியது.

பெரியாழ்வாரின் அவதாரத் தலம் இது. ஆண்டாள் பற்றிய வைபவம் பெரும் சிறப்புக்குரியதாகும். இதனை மீனவர் ஆடிப் பூரமாம் அழகிய நாளன்று சூடித்துழாய் கொடுத்த தலம் என்கிறார்.

**சரபன் எனும் ஒருவன் சாபத்தை நீக்கிஅவர்**
**வரமுனிவ ராக வடஆலின் கீழிருந்த தலமிதனை**
**ஒருமுறைநீர் சேவித்தால் உலகாளப் பெறுவீரே!**

என மீனவர் பாடியதற்கான வரலாற்றைக் கூறினார்.

கங்கையில் தவம் செய்து கொண்டிருந்த சரப முனிவர்தம் கர்மாவின் வினையால் வேடனாய்ப் பிறந்து கங்கைக் கரை முனிவர்களைத் துன்புறுத்தினானாம், இதனால் முனிவரெல்லாம் இவ்வேடனை விரட்ட, அவனும் ஒருகுருவிடம் அடைக்கலம் அடைய, அக்குருவும் தம் ஞானக்கண்ணால் நோக்கி இவ்வேடனின் முன்ஜென்ம விருத்தாந்தத்தை அறிந்து சமாதானம் செய்தாராம்.

இதனால் வேடனைத் துரத்திவந்த இருவரும் வராக ஷேத்திரத்திற்

பிறந்து வில்லன், கண்டன் எனப்பெயர் பெற்று வாழ்க்கையில் அவ்வராக தேச வில்லனால் உருவானதே வில்லிபுத்தூர் என்றும் பரந்தாமன் முன்பு வராக மூர்த்தியாய் நிலத்தைத் தோண்டியதால் திருமகள் இங்கே பிறக்க உள்ளதன் படி ஆண்டாள் பிறந்ததாகவும் அவள் திருவரங்க மன்னரையே மணந்ததாகவும் விரிவானவரலாற்றை யெல்லாம் இப்பரந்தாமன் பாமாலையில் பக்திப் பரவசமாய்ப் பாடிக் காட்ட இந்த வடபெரும் கோயில் சந்நிதி முன் இடம்பிடிக்க வைகுந்தம் இடம் கொடுக்கும் என்றபடிச் சேவாதிகள் நம்பிக்கையுடன் கை கூப்பித் தொழுது பணிந்து திருத்தங்கல் என்னும் தலத்திற்குப் பயணித்த சேவாதிகள், திருவாம் திருமகள் தங்கி, தவம் செய்ததால் திருத்தங்கல் என்ற பெயர் அமைந்த வரலாற்றையறிந்து செங்கமலத தாயார் உடனாய நின்ற நாராயணரைச் சேவிக்கின்றனர்.

இத்தலத்தின் மங்களா சாசனத்தில் திருமங்கையாழ்வாரும் பூதத்தாழ்வாரும் திருத்தண்கால் என்று கூறி வழிபட்டதால் தண்ணிய தென்றல் வீசும் இங்குள்ள ஆலமரத்தின் கீழ் மலைச்சாரலில் பள்ளி கொண்ட பரந்தாமனை மீனவர் காட்டத் தங்காலமலை வந்து தவமிருக்கும் திருமகளைச் சேவாதிகளாகிய நாம் வணங்கி மகிழ்கிறோம்.

பரந்தாமன் ஆல இலையில் ஒரு சமயந்தான் பள்ளி கொண்டதில் முழுநிறைவடையாததால் அந்த ஆலஇலையின் வேண்டுதலை நிறைவேற்ற, திருமால் ஆலமரமான மலையாகவே நின்றாராம். அதனால் தங்கு + ஆல + மலை என்ற கூட்டுச் சொற்களே தங்காலமலை என ஆனதாக மீனவர் தங்கால மலை என்ற தன் விளக்கத்தை வரலாறாகக் கூறினார்.

மேலும் மூர்த்தி தீர்த்தம் தலம் என்ற முப்பெருமையுடையதாகவும் ஆயர் குலத்தில் அவதரித்த கண்ணபிரானின் பேரன் அநிருத்தன் என்பான் உசை (உஷை)யைக் கூட்டி வந்து மணம் முடித்த தலம் என்பதாகவும் கூறக் கேட்ட சேவாதிகள் அமுதமெனத் தித்தித்ததாய் மகிழ்ந்து மீனவருடன் மாமதுரைக் கூடலழகரைக் காணும் வேட்கை முந்த மதுரை நகரின் மையப் பகுதியில் உள்ள திருக் கூடலில் சங்கமிக்கின்றனர்.

மதுரையின் இரயில் நிலையம் பேருந்து நிலையம் இருக்கும் போக்குவரத்து மிக்க இடத்தின் சமீபத்தில் உள்ள இத்தலத்தில் கூடுவது மிக எளிது என்பதால் திருக்கூடல் என்ற பெயர் இயல்பாய் அமைந்தது. இதனை முக்கூடல் எனச் சிலாகிக்குமாறு மூன்று நிலைகளில் பரந்தாமன் தரைத்தளத்தில் அமர்ந்தும் அதற்கு மேல் தளத்தில் நின்றும் அதற்கும் மேலான தளத்தில் கிடந்தும் காட்சி தருபவனாக உள்ளதால் முக்கூடல் தலம் என்ற திருச்சாநித்தியத்தால் உணர முடிகிறது.

இத்தலப் பெருமையைப் பெரியாழ்வார் மருப்பதத்தில் கயல் பொறித்த பாண்டியனார் தம்முடைய திக்குலம் வாழ வழிவழி அருள் செய்ததாகக் கூறியதை மீனவனார் தம் பாமாலையில் பதிவு செய்துள்ளார்.

இத்தலத்தில் தான் பெரியாழ்வாருக்குப் பொற்கிழிப் பரிசு கிட்டியதாக மீனவர் கூறுகையில் பெரியாழ்வார் பொற்கிழியைப் பெற்ற தலம் என்றார்.

வல்லப தேவன் என்னும் மன்னன் மதுரையை ஆளுகையில் முத்தியளிக்கும் தலம் எது! என அறிய விரும்பி எல்லா மதத்தினர்க்கும் அறிவிப்பு அனுப்பியதோடு சரியாகக் கூறுபவர்க்குப் பொற்கிழி தானே கிட்டும் என்றபடியான போட்டியில் பெரியாழ்வார் எண்ணற்ற எடுத்துக் காட்டுக் காட்டி நிருபணம் செய்து பொற்கிழி பெற்றார் என்பதாக மீனவர் கூறியதோடன்றி இத்தலத்தில் பெரியாழ்வார் பாடிய திருப்பல்லாண்டு தான் எல்லாத்திவ்ய தேசத்திற்குமான பல்லாண்டாய் அமைந்ததாகக் கூறியதைக் கேட்டுச் சிலிர்த்துப் பெரியாழ்வாரின் பெருந் தமிழைப் போற்றியவாறு வையையாற்றில் இறங்கித் தீர்த்தமாடுவோர்க் கெல்லாம் வரமருளும் கள்ளழகர் வாழும் திருமாலிரும் சோலை மலைக்குச் சேவாதிகள் மீனவருடன் நடந்து சென்று, திருமாலிரும் சோலை திகழும் சிலம்பாற்றில் தீர்த்தமாடிக் கள்ளழகராம் சுந்தரராசனைச் சுந்தர வல்லியுடன் சேவித்து வரம் வேண்டுகின்றனர்.

அழகை மனிதகுலம் ஆராதித்தது! தர்மசக்திகளுக்குத் தரிசனம் தரும் ஆதிமூலம் பரம் பொருளுக்குப் பேரழகே வடிவம்! இந்த இயற்கை வனப்புடன் கூடிய சுந்தர வடிவினனான பரந்தாமன் தங்கை மீனாட்சியின் அழகுத் திருமணம் காண மின்னும் பரியேறி மிடுக்காக

வைகை நதி இறங்கும் அழகுத்திருவிழா உலகத்தரம் வாய்ந்த தாய் மீனவர் பாமாலையில் பக்தியுடன் கூறுகிறார். மேலும், தென்றல் தவழும் மலைச் சாரலாம் சோலைமலை என்னும் குன்றில்குமரவேளும் குடியிருக்கும் படைவீட்டுத் தலம் இருப்பதையும் மீனவர்காட்ட ஆங்காங்கே சென்று கோயில்நகராம் மதுரையையே சேவாதிகள் வணங்கி வலம் வர; குழலழகர், வாயழகர், கொப்பூழ் அழகரென ஆராதித்த ஆண்டாளின் மங்களாசாசன வரிகளுடன் அச்சோ! ஒரழகியவா! என வியந்த திருமங்கை மன்னரின் மங்களா சாசனத்தையும் முனுமுனுத்தவாறு கள்ளழகர் திருவடி வணங்கிப் பணிகின்றனர்.

திருமாலுக்கு மாயன் என்ற சிறப்புப் பெயருண்டு. மாயத் தன்மையிலே மயக்குபவன் என்பதால் மால் என்ற பெயரும் உண்டு. இவை எல்லாவற்றையும் ஒருங்கே கூட்டி உணர்ந்தால் கள்ளத்தனம் செய்வதிலேயே ஓர் அழகுடையவன் என்பதைக் குறிக்கக் கள்ளழகர் எனப்பட்டதாகத் திருமாலிருஞ் சோலைமலைச் சுந்தரராமனை வணங்கிய வாறாய்த் திருமோகூருக்குச் சேவாதிகள் சென்று வணங்குவதை இனிக் காண்போமாக!

## உலகளாவிய விநாயகர் வழிபாடு

**(இல.பழனியப்பன்)**

விநாயகரே முழுமுதற்கடவுள்; விநாயகரே பிள்ளையார் இதுவே உலகறிந்த உண்மை!

சமரசசன்மார்க்க நெறியை உலகுக்குத் தந்த சிவநெறி ஆகிய சைவ நெறித் தந்தை சிவபெருமானின் மூத்த பிள்ளையே இந்தப் பிள்ளையார்; பார்வதி தேவியின் தலை மகன் உலகில் உள்ள எல்லா நெறிகளும் ஏற்றுக் கொண்டுள்ள அற்புதத் தெய்வம், கண்கண்ட தெய்வம் இந்தப் பிள்ளையார் மட்டுமே!

சைவ நெறித் தலைவரின் தலைப் பிள்ளை இன்று உலகுக்கே சொந்தமாகி விட்டது. இது நமக்குப் பெருமையே!

பிள்ளையார் தடைகளை நீக்கி நம்மைக் காத்தருளும் தானைத் தலைவன்; அனைத்துத் தேவதைகளுக்கும் நிகரற்ற தலைவரும் இவரே.

எல்லாத் தெய்வங்களுக்கும் இவரே முதல்வர். அவ்வாறே எல்லாப் புராணங்களும் விநாயகரே முதல்வர் என்பதை மனப்பூர்வமாக ஒப்புக்கொண்டுள்ளன. பிள்ளையார் முகத்தை ஆழ்ந்து நோக்குங்கள்; அவர் பாலசந்திரனாகத் தெரிய வில்லையா? கணபதி என்பதும் விநாயகரின் திருநாமமே!

கணபதி என்றிடக் கலங்கும் வல்வினை
கணபதி என்றிடக் காலனும் கைதொழும்
கணபதி என்றிடக் கருமமாதலால்
கணபதி என்றிடக் கவலை தீரும்.

இது திருமூலச் சித்தரின் விநாயகர் பற்றிய படப் பிடிப்பு.

கணபதி என்றிடக் காலனே கைதொழுது நிற்கும் என்பதை நாம் மனதில் கொள்ள வேண்டும். காலன் யாருக்காகவும், எதற்காகவும் தன் கடமையிலிருந்து தவற மாட்டான்; அப்படிப்பட்ட காலனே கணபதியை வணங்குகிறான் என்றால் விநாயகரின் தெய்வீக ஆற்றல் நமக்குப் புரியுமல்லவா!

பிள்ளையார் வழிபாடு எப்போது வந்தது? எப்படி வந்தது என்பதை யாராலும் இறுதியிட்டுக் கூறமுடியாது. தந்தையாரின் ஆசி பெற்ற பிள்ளையார் நம் நம்பிக்கை நாயகனாக அந்தத் தும்பிக்கையான் வலம் வருகிறார்.

பிள்ளையாரைக் கரிமுகன், ஆனைமுகன் என்றும் அழைப்பார்கள். தமிழ் நாட்டில் எங்கும் மிகப் பரவலாக வழிபடப்படும் ஒரே கடவுள் பிள்ளையாரே எல்லாக் கடவுளுக்கும் முன்னதாக வழிபடப் படுபவர் என்பதும் இவருக்கு மட்டுமே உள்ள தனிச்சிறப்பு ஆகும். இவர் கி.பி. ஆறாம் நூற்றாண்டில் தமிழ் நாட்டுக்கு அறிமுகமாகி உள்ளர். அதற்கு முந்திய காலமான சங்க இலக்கிய காலத்தில் பிள்ளையார் வழிபாடு பற்றி எந்தக் குறிப்பும் இல்லை.

இந்த வழிபாடு மராட்டியத்தின் தென் பகுதியில் புனே நகரைச் சார்ந்த சித்பவனப் பிராமணர் இடையே தோன்றியது என ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். அதன் பின்னர், கீழைச் சாளுக்கியருடைய வாதாபி நகரத்தில் நிலை கொண்டு அங்கிருந்து தமிழ் நாட்டிற்குள் பரவி வளர்ந்ததாகவும் கூறுகிறார்கள்.

தேவாரத்தில் இக்கடவுள் கணபதி என்றே அழைக்கப்படுகிறார். முற்காலப் பாண்டியர் குடவரை, கட்டிடக் கோவில்களில் கணபதி பரிவாரத் தெய்வமாக (சேட்டை) மூதேவியுடன் இடம் பெற்றுள்ளார்.

முதலாம் இராசராச சோழன் எடுப்பித்த தஞ்சைப் பெரிய கோயிலில் பரிவார தெய்வங்களில் ஒன்றாகக் கணபதியும் சேர்க்கப்பட்டிருக்கிறார்.

பரிவார ஆலயத்துப் பிள்ளையார் கணபதியார் எனக் கல்வெட்டு இவரைக் குறிக்கிறது. இவருக்கு வாழைப்பழம் படைக்கப்பட்டதும் அக்கல் வெட்டில் தெரியவருகிறது. இவை ஒரு புறமிருக்க, காலத்தால் முந்திய பிள்ளையார் உருவமாகத் தமிழ்நாட்டில் அறியப்படுவது. சிவகங்கை மாவட்டம் காரைக்குடி அருகில் உள்ள பிள்ளையார்பட்டியில் அமைந்துள்ள பிள்ளையார் சிலையின் மூலமே!

ஒரு சிறிய பாறைக் குன்றில் அமைக்கப்பட்டுள்ள குடவரைக் கோயில் புடைப்புச் சிற்பமாக இது விளங்குகிறது. மனித சாயலை விட யானையின் சாயலே இச்சிலையில் மிகுதியாகத் தோற்றமளிப்பது இதன் தனித்தன்மையாகும். இதன் காலம் கி.பி. ஆறாம் நூற்றாண்டு என அறிஞர்களால் கணிக்கப்பட்டுள்ளது.

இப்போது கற்பக விநாயகர் என அழைக்கப்படும் இவ்விநாயகரின் பழைய பெயர் தேசி விநாயகர் என்பதாகும். தேசி, தேசிகர் என்பது வணிகர்களைக் குறிப்பிடும் சொல்லாகும். நானா தேசிகன் என்பது தமிழ் நாட்டில் இருந்த பெரிய வணிகக் குழுவின் பெயரே. இதன் மூலம் வணிகர்களே இப்பிள்ளையாரை அதிகம் கொண்டாடிய செய்தியை அறிய முடிகிறது.

இந்தத் திருக்கோயில் பழைமை வாய்ந்த வணிகர்களான நாட்டுக்கோட்டை செட்டியார்கள் என அழைக்கப்படும் நகரத்தார்களால் சிறப்பாக நிர்வகிக்கப்பட்டு வருகிறது. தஞ்சைப் பெரிய கோயில் பிள்ளையாருக்கு நாள் தோறும் வாழைப்பழம் வழங்கும் பொறுப்பு தஞ்சாவூரில் நான்கு குடியிருப்புகளில் வாழ்ந்த நகரத்தார்களிடம் ஒப்படைக்கப்பட்டது. அவர்கள்

தஞ்சாவூர் புறப்படி நித்த வினோதப் பெருந் தெரு

மும்முடிச் சோழப் பெருந்தெரு

வீரசிகாமணிப் பெருந்தெரு

திரிபுவன மாதேவிப் பேரங்காடி

ஆகிய நகரத்தார் ஆவர்.

நரசிம்மபல்லவனின் படைத்தளபதியான சிறுத்தொண்டர் வாதாபி நகரத்திலிருந்து இந்த வழிபாட்டைத் தமிழ் நாட்டுக்குக் கொண்டு வந்துள்ளார் எனவும் தெரிய வருகிறது. பிள்ளையார்பட்டி கற்பக விநாயகர் பற்றிக் கவியரசர் கண்ணதாசன்

அற்புதக் கீர்த்தி வேண்டின்

ஆனந்த வாழ்க்கை வேண்டின்

நற்பொருள் குவிதல் வேண்டின்

நலமெலாம் பெருக வேண்டின்

கற்பக முர்த்தி தெய்வக்

களஞ்சியத் திருக்கை சென்று

பொற்பதம் பணிந்து பாரீர்

பொய்யிலை கண்ட உண்மை!

என்று அனுபவித்துப் பாடியுள்ளார்.

ஆனைமுகத்தனைக் காதலால் கைதொழுதால் வாக்கும் செயலும் கைகூடும்; செஞ்சொல் பெருவாக்கும் பீடும் பெருக்கும் என்று பழம்பெரும் புலவர் கபிலர் கூறியுள்ளது உண்மை.

ஔவையார் சங்கத்தமிழ் மூன்றையும் விநாயகரிடம் கேட்கிறார் பிள்ளையார் வழிபாட்டிற்கு மிகப் பெரிய ஏற்பாடுகள் தேவையில்லை. மஞ்சளிலே செய்திடினும் மண்ணிலே செய்திடினும் நமக்கு அருள் தந்து ஆட்கொள்ளும் தெய்வம் பிள்ளையார் மட்டுமே.

சைவக் கடவுளான பிள்ளையார் தும்பிக்கை ஆழ்வார் என்ற ஒரே பெயரில் அழைப்பது நோக்கத்தக்கதாகும். சமணர்களும், பௌத்தர்களும் பிள்ளையார் வழிபாட்டைத் தவறாது மேற் கொண்டவர்கள் என்பது நமக்கு வியப்பைத் தரலாம் ஆனால் அது உண்மை என்று கல்வெட்டுகள் கூறுகின்றன.

நாம் பிள்ளையாருக்கு அருகம்புல் சாத்துகிறோம். அது அறிவியல் ரீதியான ஒன்று. ஆம் அருகம்புல் உடல் வெப்பத்தையும் மன வெப்பத்தையும் தணிக்க வல்லது. தனது பக்தர்கள் இவற்றைத்

தணித்து நலமுடன் வாழ அவர்களுக்காகப் பிள்ளையார் அருகம்புல்லை ஏற்றுக் கொள்கிறார். பொதுவாக எல்லா ஞானிகளும் இறைவன் ஏழைகளின் நண்பன் என்று சொல்கிறார்கள். நமது பிள்ளையார் ஏழைகளின் உத்தம நண்பன் என்றே சொல்ல வேண்டும்.

நம்மைத் தொல்லைகளும் துயரங்களும் ஆட்டிப் படைக்கும் போது அவரை மனப்பூர்வமாக நினைத்தால் கூப்பிட்ட குரலுக்கு ஓடி வந்து நம் குலம் தழைக்க வழி காட்டுவார். இது அனுபவப்பூர்வமான உண்மையே. பிள்ளையார் நாம் அறியாமையில் நமக்குள் ஏற்படுத்திக் கொள்ளும் பேதங்களைப் போக்கி நம்மை ஞானவழிக்கு இட்டுச் செல்கிறார். தும்பிக்கையான் மீது கொள்ளும் நம்பிக்கை நம் துயர்களைக் கட்டாயம் போக்கும்.

கடல் கடந்து வெளிநாடுகளில் வெவ்வேறு பெயர்களால் அழைக்கப்படுகிறார். அவர் இந்துக் கடவுள் என்ற நிலை கடந்து சைவநெறி வழியில் அனைத்து மதத்தினரும் தொழும் உலகளாவிய உன்னதத் தெய்வமாகத் திகழ்கிறார். கி.பி. ஐந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த கணபதியின் சிலை ஆப்கானிஸ்தானில் கண்டுபிடிக்கப் பட்டுள்ளது.

மியான்மர் ஆகிய பர்மாவில் புத்த மடங்களிலும் விநாயகர் சிலை வைத்து வழிபடப்படுகின்றது. அவ்வாறே ஜப்பானிலும் ஷோடர் பிள்ளை என்ற பெயரால் விநாயகர் என்று அழைக்கப்படுகிறார். இவர் புத்த மதக் கடவுளாகவே இங்கே பார்க்கப்படுகிறார். சிங்கப்பூரில் 200 ஆண்டுகள் பழமையான பிள்ளையார் கோவில்களும் உள்ளன. தமிழர் இங்கே வழக்கமான பெயரிலேயே அழைத்துக் கொண்டாடுகிறார்கள். இந்தோனேசியாவில் கணபதி வழிபாடு சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. நேபாளத்தில் புத்த மதம் இவரை வழிபட வைத்தே எந்தச் செயலையும் தொடங்குகிறார்கள்.

இலங்கை நம்மோடு பலயுகங்களாகத் தொடர்பில் இருப்பதால் கிளிநொச்சி, யாழ்ப்பாணம், வவுனியா, முல்லைத் தீவு, மட்டக்களப்பு, அம்பாரை முதலிய இடங்களில் விநாயகர் அருள்பாலிக்கிறார். மலேசியத் தமிழர்கள் விநாயகர் வழிபாட்டைப் பல ஆண்டுகளாகச் சீரிய முறையில் செய்கிறார்கள். கிரிஸ் எகீப்த் நாடுகளிலும் நமது

விநாயகர் அருள் பாலிக்கிறார். உருவ அமைப்பில் மாறுபட்டிருந்தாலும் விநாயகப் பெருமான் உலகம் முழுவதையும் அருள்பாலித்துக் காத்துக் கொண்டிருக்கிறார். அந்த உலக வழிபாடு சிறக்க நாம் நம்மை அர்ப்பணிப்போம்.

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### நட்பு

(படையைப் போல உதவும் நட்பினைக் கூறுவது)

1. செயற்குஅரிய யாவுள நட்பின் அதுபோல்
   வினைக்கு அரிய யாவுள காப்பு.

செயற்குஅரிய - செய்து கொள்வதற்கு அரியவை; யாவுள - எவை உள்ளன? நட்பின் - நட்பினைப் போல; அதுபோல் - அதுபோல; வினைக்கு அரிய - செய்யும் செயலுக்கு அரியவை; யாவுள - எவை உள்ளன? காப்பு - காவல்.

நட்பினைப் போலச் செய்து கொள்வதற்கு அரியவை எவை உள்ளன? (அது போல) செய்யும் செயலுக்குக் காவலாக நட்பைப் போல அரியவை எவை உள்ளன.

செயலாற்றுதற்கு நட்பே அரிய காவல் ஆகும். நட்பின் - இன் உவம உருபு.

2. நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
   பின்நீர பேதையார் நட்பு.

நிறைநீர - நிறைந்த தன்மை போல; நீரவர் - உயர்ந்த தன்மை உடையவர்; கேண்மை - நட்பு; பிறைமதி - பிறைகொண்ட நிலவின்; பின்நீர - பிற்பகுதி குறையும் தன்மை போல; பேதையார் நட்பு - அறிவில்லாதவரோடு கொண்ட நட்பு.

உயர்ந்த அறிவுடையவர் நட்பு பிறை கொண்ட நிலவின் நிறைந்த தன்மை போல ஆகும். அறிவில்லாதவரோடு கொண்ட நட்பு பிறை நிலவின் பிற்பகுதி குறையும் தன்மை போல ஆகும்.

பேதையார் என்பதால் நீரவர் என்பதற்கு அறிவுடையவர் எனப் பொருள் கொள்ளப்பட்டது.

கேண்மை - பண்புப் பெயர்.

3. நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு.

நவில் தொறும் - படிக்கும் பொழுதெலாம்; நூல் நயம் போலும் - நூலின் பொருள் நயம் இன்பம் தருவது போன்று; பயில் தொறும் - பழகும் பொழுதெலாம்; பண்புடையாளர் தொடர்பு - நற்பண்பு உடையவர்களோடு கொள்ளும் நட்பு.

படிக்கும் பொழுதெலாம் நூலின் பொருள் நயம் இன்பம் தரும்; அது போல் நற்பண்பு உடையவர்களோடு கொள்ளும் நட்பு பழகும் பொழுதெலாம் இன்பம் தரும்.

நூல் நயம் - ஆறாம் வேற்றுமைத் தொகை.

4. நகுதல் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென்று இடித்தல் பொருட்டு.

நகுதல் பொருட்டன்று - சிரித்து மகிழ்வது என்னும் பொருட்டாகாது; நட்டல் - நட்புக் கொள்ளுதல்; மிகுதிக்கண் - ஒருவன் தன்னை மீறிய தகாதன செய்யும் போது; மேற்சென்று - அவனிடம் உடனே சென்று; இடித்தல் பொருட்டு - நல்லன எடுத்துச் சொல்லும் பொருட்டே ஆகும்.

ஒருவன் பிறனிடம் நட்புக் கொள்ளுதல் சிரித்து மகிழ்வது என்னும் பொருட்டாகாது; அவன் தன்னை மீறிய தகாதன செய்யும் போது அவனிடம் உடனே சென்று நல்லன எடுத்துச் சொல்லும் பொருட்டே ஆகும்.

நட்டல் - தொழிற் பெயர்.

5. புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாம் கிழமை தரும்.

புணர்ச்சி - தொடர்பும்; பழகுதல் - பழக்கமும்; வேண்டா - வேண்டியதில்லை; உணர்ச்சிதான் - ஒருமித்த எண்ண உணர்ச்சிதான்; நட்பாம் - நட்பு என்னும்; கிழமை தரும் - உரிமையைத் தரும்.

தொடர்பும் பழக்கமும் நட்புக் கொள்வதற்கு வேண்டியதில்லை; ஒருமித்த எண்ண உணர்ச்சிதான் நட்பு என்னும் உரிமையைத் தரும்.

வேண்டா - எதிர்மறை வினைமுற்று.

6. முகம்நக நட்பது நட்பன்று நெஞ்சத்து
அகம்நக நட்பதே நட்பு.

முகம்நக - முகமலர்ச்சியடைய; நட்பது - நட்புக்கொள்வது; நட்பன்று - நட்பு ஆகாது; நெஞ்சத்து - உள்ளத்தின்; அகம்நக - உள்ளே மலர்ச்சியடைய; நட்பதே நட்பு - நட்புக் கொள்வதே நட்பாகும்.

முகமலர்ச்சியடைய நட்புக் கொள்வது நட்பு ஆகாது; உள்ளத்தின் உள்ளே மலர்ச்சியடைய நட்புக் கொள்வதே நட்பாகும்.

நட்பு உள்ளத்தின் மலர்ச்சியால் வரவேண்டும்.

**7. அழிவி னவைநீக்கி ஆறுஉய்த்து அழிவின்கண்**
**அல்லல் உழப்பதாம் நட்பு.**

அழிவினவை - கேடுதருவனவற்றை; நீக்கி - விலக்கி; ஆறு உய்த்து - நல்ல வழிகளில் செலுத்தி; அழிவின்கண் - கேடுவந்த போது; அல்லல் உழப்பதாம் - அதனால் வரும் துன்பத்தில் தானும் வருந்துவது தான்; நட்பு - நட்பாகும்;

கேடுதருவனவற்றை விலக்கி நல்ல வழிகளில் செலுத்திக் கேடுவந்த போது அதனால் வரும் துன்பத்தில் தானும் வருந்துவது தான் நட்பாகும்.

கேட்டினை நீக்கி நல்வழிப் படுத்துவதும் கேடு வந்தபோது தானும் துன்பமடைவதும் தான் நட்பாகும்.

அழிவினவை - வினையால் அணையும் பெயர்.

**8. உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே**
**இடுக்கண் களைவதாம் நட்பு.**

உடுக்கை இழந்தவன் - உடுத்திய ஆடையை நழுவவிட்டு நிற்பவன்; கைபோல - உடனே சென்று ஆடையைப் பற்றிக் கொள்ளும் கையினைப் போல; ஆங்கே - அப்பொழுதே, இடுக்கண் - ஒருவனுக்கு ஏற்படும் துன்பத்தை; களைவதாம் நட்பு - விலக்குவதே நட்பாகும்.

உடுத்திய ஆடையை நழுவவிட்டு நிற்பவனின் கை உடனே சென்று ஆடையைப் பற்றிக் கொள்வது போல ஒருவனுக்கு ஏற்படும் துன்பத்தை அப்பொழுதே விலக்குவது நட்பாகும்.

நழுவும் ஆடையைப் பற்றிடும் கைபோல் துன்பம் வரும்போது அதைத் தடுப்பதே நட்பாகும்.

**9. நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனின் கொட்பு இன்றி**
**ஒல்லும்வாய் ஊன்றும் நிலை.**

நட்பிற்கு - நட்பு என்பதற்கு; வீற்றிருக்கை - அது வீற்றிருக்கும் இருக்கை; யாதெனின் - எது என்றால்; கொட்பு இன்றி - திரிபு இல்லாமல்; ஒல்லும் வாய் - இயன்ற இடத்தில்; ஊன்றும் நிலை - தாங்கி நிறுத்தும் நிலைப்பாடாகும்.

நட்பு என்பதற்கு அது வீற்றிருக்கும் இருக்கை எது என்றால் திரிபு (மாற்றம்) இல்லாமல் இயன்ற இடத்தில் தாங்கி நிறுத்தும் நிலைப்பாடாகும்.

ஒருவர்க்குத் துன்பம் நேரும் போது தாங்கி நிறுத்தும் நிலைப்பாடே அவர் கொண்ட நட்பு அமரும் இடமாகும்.

**10. இனையர் இவர்எமக்கு இன்னம்யாம் என்று**
**புனையினும் புல்லென்னும் நட்பு.**

இனையர் - இத்தன்மையுள்ளவர்; இவர் எமக்கு - இவர் நமக்கு; இன்னம் யாம் - நாங்கள் இத்தன்மை கொண்டவர்கள்; என்று புனையினும் - என்று புனைந்து கூறினாலும்; புல்லென்னும் நட்பு - நட்பு சிறுமையான தாகிவிடும்.

இவர் நமக்கு இத்தன்மையுள்ளவர்; நாங்கள் இத்தன்மை கொண்டவர்கள் என்று புனைந்து கூறினாலும் அந்த நட்பு சிறுமையானதாகிவிடும்.

நட்பில் ஒருவர்க் கொருவர் பாராட்டினாலும் நட்பு பெரிதாகத் தோன்றாது.

புனையினும் - எச்ச உம்மை.

## நட்பு ஆராய்தல்

### நட்பினை ஆராய்ந்து ஏற்கும் திறம்

**1. நாடாது நட்டலின் கேடு இல்லை நட்டபின்**
**வீடு இல்லை நட்புஆள் பவர்க்கு.**

நாடாது - ஆராயாமல்; நட்டலின் - நட்புக் கொள்வதால்; கேடுஇல்லை - கேடு கிடையாது; நட்டபின் - நட்புக் கொண்ட பின்னர்; வீடு இல்லை - நட்பினை விட்டுவிடுதல் கூடாது; நட்பு ஆள்பவர்க்கு - நட்பினைக் கொண்டவர்க்கு;

ஆராயாமல் நட்புக் கொள்வதால் கேடு கிடையாது; நட்புக் கொண்ட பின்னர் நட்பினைக் கொண்டவர்க்கு அந்த நட்பினை விட்டு விடுதல் கூடாது.

ஆராயாமல் நட்புக் கொண்டபின் அதனை விட்டுவிடுதல் இயலாது.

நாடாது - எதிர்மறை வினை எச்சம்

கேடு, வீடு - முதனிலை திரிந்து தொழிற் பெயர்கள்

**2. ஆய்ந்து ஆய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை**
**தான்சாம் துயரும் தரும்.**

ஆய்ந்து ஆய்ந்து - பலகாலும் ஆராய்ந்து; கொள்ளாதான் - கொள்ளாதவனுடைய; கேண்மை - நட்பு; கடைமுறை - முடிவில்; தான்சாம் - தான் சாவதற்கான; துயரும் தரும் - துயரத்தையும் தரும்.

பலகாலும் ஆராய்ந்து நட்புக் கொள்ளாதவனின் நட்பு முடிவில் அவன் சாவதற்கான துயரத்தையும் தரும்.

ஆராயாமல் கொள்ளும் நட்பு சாகும் அளவுக்குத் துன்பம் தரும்.

ஆய்ந்து ஆய்ந்து - அடுக்குத் தொடர், துயரும் - எச்ச உம்மை

**3. குணனும் குடிமையும் குற்றமும் குன்றா**
**இனனும் அறிந்துயாக்க நட்பு.**

குணனும் - ஒருவருடைய குணத்தினையும்; குடிமையும் - குடிப்பிறப்பையும்; குற்றமும் - குற்றத்தினையும்; குன்றா - குறைவுபடாத; இனனும் - சுற்றத்தினையும்; அறிந்து - ஆராய்ந்தறிந்து; யாக்க நட்பு - நட்புக் கொள்ள வேண்டும்.

ஒருவருடைய குணத்தினையும் குடிப்பிறப்பையும் அவர்செய்த குற்றத்தினையும் குறைவுபடாத அவரது சுற்றத்தினையும் ஆராய்ந்து அறிந்து நட்புக் கொள்ள வேண்டும்.

குணனும்... உம் - எண்ணும்மை

அறிந்து - வினை எச்சம், யாக்க - வியங்கோள்

**4. குடிப்பிறந்து தன்கண் பழிநாணு வானைக்**
**கொடுத்தும் கொளல் வேண்டும் நட்பு.**

குடிப்பிறந்து - உயர்ந்த நற்குடியில் பிறந்து; தன்கண் - தன்னிடத்துச் சொல்லப்படும்; பழி நாணுவானை - பழிகளுக்காக அஞ்சி வெட்கப்படுபவனை; கொடுத்தும் - எவையேனும் கொடுத்தாவது; கொளல் வேண்டும் நட்பு - நட்புக் கொள்ள வேண்டும்.

உயர்ந்த நல்ல குடியில் பிறந்து தன்னிடத்துச் சொல்லப்படும் பழிகளுக்காக அஞ்சி வெட்கப்பட்டுபவனை எவையேனும் கொடுத்தாவது நட்புக் கொள்ள வேண்டும்.

குடிப்பிறந்து - ஏழாம் வேற்றுமைத் தொகை

பழிநாணுவான் - நான்காம் வேற்றுமைத் தொகை, கொடுத்தும் - எச்ச உம்மை

**5. அழச்சொல்லி அல்லது இடித்து வழக்கு அறிய**
**வல்லார் நட்பு ஆய்ந்து கொளல்.**

அழச்சொல்லி - தவறு நேரும் போது நட்புக் கொண்டவன் அழும்படியாகச் சொல்லியும்; அல்லது இடித்து - செய்யத் தகாததைச் செய்யாதே எனக் கண்டித்தும்; வழக்கு அறிய வல்லார் நட்பு - உலக வழக்கினை அறியச் செய்யும் வல்லவரின் நட்பினை; ஆய்ந்து கொளல் - ஆராய்ந்து கொள்ள வேண்டும்.

தவறு நேரும் போது நட்புக் கொண்டவனாயினும் அழும்படியாகச் சொல்லியும் செய்யத் தகாததைக் கண்டித்தும் உலக வழக்கினை அறியச் செய்யும் வல்லவரின் நட்பினை ஆராய்ந்து கொள்ள வேண்டும்.

சொல்லி, இடித்து, ஆய்ந்து - வினை எச்சங்கள், கொளல் - வியங்கோள்.

**6. கேட்டினும் உண்டோர் உறுதி கிளைஞரை**
**நீட்டி அளப்பதோர் கோல்.**

கேட்டினும் - ஒருவனுக்குக் கேடு வந்தாலும்; உண்டு ஓர் உறுதி - ஒரு நன்மை உண்டு; கிளைஞரை - சுற்றமாக நட்புக் கொண்டவரை; நீட்டி அளப்பது - நீளமாய் அளப்பதற்கு உதவும்; ஓர் கோல் - ஓர் கோல் ஆகும்.

நட்புக் கொண்டவரால் ஒருவனுக்குக் கேடு வந்தாலும் ஒரு நன்மை உண்டு; அது சுற்றமாக நட்புக் கொண்டவரை அளந்து அறிவதற்கு உதவும் கோல் ஆகும்.

நட்புக் கொண்டவரால் வரும் கேட்டினால் அவரது நட்பை அறிந்து கொள்ள வேண்டும்.

கேட்டினும் - எச்ச உம்மை.

**7. ஊதியம் என்பது ஒருவற்குப் பேதையார்**
**கேண்மை ஒரீஇ விடல்.**

ஊதியம் என்பது - பெறுவதற்குரிய பொருள் என்பது; ஒருவற்கு - ஒருவனுக்கு; பேதையார் - அறிவில்லாதவரோடு; கேண்மை - கொண்ட

நட்பினை; ஒரீஇ விடல் - விட்டு விலகி விடுதல் ஆகும்.

அறிவில்லாதவரோடு கொண்ட நட்பினை விட்டு விலகி விடுதலே ஒருவனுக்குப் பெறுவதற்குரிய பொருள் என்பது ஆகும்.

ஒரீஇ - சொல்லிசை அளபெடை

**8. உள்ளற்க உள்ளம் சிறுகுவ கொள்ளற்க**
**அல்லற்கண் ஆற்று அறுப்பார் நட்பு.**

உள்ளற்க - நினைக்கக் கூடாது; உள்ளம் சிறுகுவ - உள்ளத்தில் உண்டாகும் முயற்சி சுருங்குவதான செயல்களை; கொள்ளற்க - கொள்ளக் கூடாது; அல்லற்கண் - தமக்குத் துன்பம் நேரும் போது; ஆற்று அறுப்பார் நட்பு - உதவும் வழியினை விட்டு விடுபவரின் நட்பு.

உள்ளத்தில் உண்டாகும் முயற்சி சுருங்குவதான செயல்களை நினைக்கக் கூடாது. அதுபோல் தமக்குத் துன்பம் நேரும் போது உதவும் வழியினை விட்டு விடுபவரின் நட்பைக் கொள்ளக் கூடாது.

உள்ளற்க, கொள்ளற்க - எதிர்மறை வியங்கோள்

சிறுகுவ - வினையால் அணையும் பெயர்.

**9. கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை அடுங்காலை**
**உள்ளினும் உள்ளம் சுடும்.**

கெடுங்காலை - துன்பம் வரும் போது; கைவிடுவார் கேண்மை - உதவாமல் விட்டு விலகுவாரின் நட்பு; அடுங்காலை - எமன் தன்னைக் கொல்ல வரும் போது; உள்ளினும் - நினைத்தாலும்; உள்ளம் சுடும் - தன் உள்ளத்தைச் சுடும்.

துன்பம் வரும் போது உதவாமல் விட்டு விலகுவாரின் நட்பினை, எமன் தன்னைக் கொல்ல வரும் போது நினைத்தாலும் அந்த நட்பு தன் உள்ளத்தைச் சுடும்.

ஆராயாமல் கொண்ட நட்பு இறக்கும் போது கூட உள்ளத்தைச் சுடும். அந்த நட்புக்காக உள்ளம் சுட்டுவிடும்.

உள்ளினும் - எச்ச உம்மை.

**10. மருவுக மாசற்றார் கேண்மை ஒன்று ஈத்தும்**
**ஒருவுக ஒப்பிலார் நட்பு.**

மருவுக - பொருந்துக; மாசற்றார் கேண்மை - குற்றமற்றவர்களின் நட்பினை; ஒன்று ஈத்தும் - ஏதேனும் ஒன்றைக் கொடுத்தாவது; ஒருவுக

- நீங்குக; ஒப்பிலார் நட்பு - மன ஒப்புமை இல்லாதவரின் நட்பு.

குற்றமற்றவர்களின் நட்பினைப் பொருந்தி ஏற்றுக் கொள்ள வேண்டும்; மன ஒப்புமை இல்லாதவரின் நட்பினை ஏதேனும் ஒன்றை அவர்க்குக் கொடுத்தாவது நீங்க வேண்டும்.

மருவுக, ஒருவுக - வியங்கோள்

ஈத்தும் - உம் இழிவு சிறப்பு, ஒன்று - ஆகுபெயர்.

*(தொடரும்...)*

## மடாலய நிகழ்வுகள்

24.09.2022 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் குடி பழி தூற்றும் கோலேன் ஆகுக என்னும் தலைப்பில் கவிஞர் நீ. இரவிச்சந்திரன் உரையாற்றினார்.

தெய்வத்திரு நாச்சியப்ப சுவாமிகளின் 11ஆவது குரு பூஜையை முன்னிட்டு நடைபெற்ற பல்வேறு போட்டிகளில் வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசளிப்பு விழா 30.09.2022 அன்று முற்பகல் நடைபெற்றது. சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் தலைமையில் சனாதன தர்ம உலகப் பல்கலைக் கழக அறநிலையின் ஆடிட்டர் திரு. சிவசுப்பிரமணியம் பரிசுகளை வழங்கினார்.

அன்று பிற்பகல் நூல் வெளியீட்டு விழா நடைபெற்றது. சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் நூல்களை வெளியிட்டு ஆசியுரை வழங்கினார். பேராசிரியர் முனைவர் கரு.முத்தையா உரை எழுதிய சீவகசிந்தாமணி இரண்டாம் பாகத்தை நாடக அறிஞர் முனைவர் ஆறு.அழகப்பன் பெற்றுக்கொண்டார். பேராசிரியர் ம.கார்மேகம் எழுதிய திரிகடுகம் முதுமொழிக் காஞ்சி உரை நூலை முனைவர் சபாரெத்தினம் பெற்றுக்கொண்டார். பேராசிரியர் முனைவர் மு.பழனியப்பன் எழுதிய நானாற்பது உரை நூலைப் பேராசிரியர் நா.சுப்பிரமணியன் பெற்றுக் கொண்டார். கவிஞர் நீ.இரவிச்சந்திரன் எழுதிய பழமொழி நானூறு உரை நூலைப் புலவர் மாமணி ஆறு.மெய்யாண்டவர் பெற்றுக் கொண்டார். நிகழ்ச்சியின் தொடக்கமாக நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி முதல்வர் முனைவர் மாணிக்கவாசகம் வரவேற்புரை வழங்கினார். நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரி முதல்வர் முனைவர் மாயாண்டி நன்றி உரை கூற விழா இனிதே நிறைவு பெற்றது.

குரு பூஜை நிகழ்ச்சியை முன்னிட்டு 01.10.2022 அன்று காரைக்குடி திருநாவுக்கரசர் இறைபணி மன்றத்தாரால் திருவாசகம் முற்றோதல் நடைபெற்றது, கைவல்ய நவநீதம் முற்றோதல் நடைபெற்றது. 02.10.2022 அன்று தெய்வத்திரு நாச்சியப்ப சுவாமிகள் சந்நிதியில் அபிஷேக ஆராதனை நிகழ்வுகள் நடைபெற்றன. அன்பர்கள் திரளாகக் கலந்து கொண்டு குருவருளும் திருவருளும் பெற்றனர்.

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்